உ

சிவமயம்

# ஆசௌச விதி.

இஃது
யாழ்ப்பாணம்
வட்டுக்கோட்டை கிழக்கு, மகாவித்துவான்
மு. ஆறுமுகம்பிள்ளையவர்களால்
இயற்றப்பட்டது.

யாழ்ப்பாணம்
நாவலர் அச்சுக்கூடம்.

1929.






உ
சிவமயம்.
கணபதிதுணை.

# முகவுரை.

## ஆசௌச விதி.

ஆசௌசமாவது சைவசமயிகள் செய்கின்ற கிரிகைகளுக்குத் தடையாக நின்று அசுத்தத்தை விளைவிப்பது. ஆ. இன்மை. சௌசம் சுத்தம்.

தங்கள் தங்களுக்குரிய சாதியொழுக்கம் சமயவொழுக்கங்கள் நித்தியகருமம் பிரமசரியம் இல்லறம் முதலிய வாச்சிரமங்களை வழுவாது அனுட்டித்தால் மேற்பதவிகளிலே தேவர்களாகப் பிறப்பர்கள். அவ்வொழுக்கங்கள் வழுவிநடந்தால் சத்தியமாகப் பிசாசுகளாவர்கள். புத்திரன் முதலியோர் செய்யுந் தகனம் முதலிய தீக்கடன்களாலும் சபிண்டீகரணம் முதலிய நீர்க்கடன்களாலும் அப்பிசாசு வடிவம் நீங்கிச் சுத்தப்படுவர்கள். ஆதலால் எல்லாரும் மேலேகாட்டிய வொழுக்கங்களையும் கிரிகைகளையும் வழுவாது செய்தல் வேண்டும்.

## கவி.

சாதியிற் சமயம்தன்னிற் சாற்றுமாச்சிரமத்துற்ற
வோதிய நியமாசார முய்த்திடினும் பாராவர்
நீதிகட வறினந்தோ நிச்சயம் பிசாசேயாவர்
நீதில் சீர்ப்புதல்வர் முன்னோர்செய்யு நற்கடனாற்
[றீரும்

திருமடம் சிவசாத்திரம் சிவாலயம் புண்ணிய தீர்த்தம் முதலியன பழுதடைந்திருக்கக் கண்டால் அவைகளைப் பழுது நீக்கிப் புதுக்குவித்து வைத்தவர்களுக்கு முன்னே யவைகளைத் தாபித்து வைத்தவர்களைக் காட்டினும் ஆயிரமடங்கு புண்ணியங்கிடைக்குமென்று சிவசாத்திரஞ் சாற்றுகின்றது.

## கவி.

மாதவர் மடங்களாதி வரதன் மந்திரங்களாதி
நாதமாரி லிங்கமாதி நளினபுட் கரணியாதி [பலந்தா
சேதமுற்றிடின் முன்போலச் செய்துளோர்க் குறும்
னோதுமுன் செய்தோர் தம்மிலாயிரங்குணித மோங்
[கும்





உ

சிவமயம்.

## சங்கானை ஸ்ரீ. அ. அருணாசலசாஸ்திரிகள்
## சொல்லிய
# நேரிசையாசிரியப்பா.



திருவளர் சதாசிவன் றிருக்கேதீச்சரம் கரு
வளர் குமரவேள் கதிரைமாமலை, மூன்றுமித்தலங்
களை முகமெனக்கொண்ட. தென்னிலங்காபுரி சிறந்த
யாழ்ப்பாண மருவுமேனாட்டின் மாதவர் மடங்களும்
அருமறைக்கிழவரு மரனாலயங்களும் உரவுசெந்தமி
ழின் னுயர்மொழிப்புலவரும் பரவுறமேவு பழைய
நன்னகரம் எட்டுறுதிசையெலாமிரும்புகழ்படைத்த
வட்டுக்கோட்டைவலநகருதயன் கற்றவர்மதிக்குங்
கதிர்காமமகிபக் கொற்றவன் றந்த குலமணச்சிறுவன்
அம்புவிமதிக்கு அம்பலவாணச் செம்மல்பயந்த சிறு
மணித்தாளம் தருமமும் பொறையுந் தயாள நற்
குணமும் பெருநிதியாமெனப் பேணுமனோகரன் சுந்
தரவாய்மை சொல்லுமேவற்பிள்ளை இந்திரனுதவு
மிரும் பொருள்கொண்டே, மண்டலநாயக முதலி
மாமரபன் முருகேசபூபதி முன்னுபூசாபலம் உருவுற
வுதித்த வுத்தம மருமான் இலக்கண விலக்கிய விருந்
தனிக்கடலை கலக்குறப் பருகிய கலைஞானமேகம்
சைவசித்தாந்த சாகரமுகட்டில் பைவரவுதித்த பா
ஞானநிலவு கூறு மலயக்குறுமுனி நிகர்க்கும் ஆறு
முகமெனு மருந்தமிழ் நாவலன் நிதமுறு மாசௌச
சுடர் விதிமுறை விளக்கை இதமுறப் புவிமீதேற்
றினன் அருங்கலை விநோதர் அறிந்து பாராட்டவே.

வண்ணார்பண்ணை

சைவப்பிரகாசவித்தியாசாலை

தி. கிருஷ்ணபிள்ளை அவர்கள்

## சொல்லியது.

மன்னுயிர்கள் பிறப்பிறப்பால் வருந்தொடக்கின்
விதிமுறையை மனதில் நாடி
உன்னிய நல்விதிமுறை சேர்
ஆசௌச தீபிகையென்றொரு நூல்
செய்தான் தன்னிகரிலாதபயன் மேலோங்க
வட்டுநகர் தன்னில் வாழ்வோன்
பன்னுமுருகேசர் தருபாலனாய
ராறுமுக பாவல் லோனே.

## இதற்குப் பொருளுதவியவர்களின் பெயர்வருமாறு.

(1) ஸ்ரீ. அ. வேலுப்பிள்ளை.
வட்டுக்கோட்டைகிழக்கு.

(2) ஸ்ரீ. அ. முதலியார் வேற்பிள்ளை
பிறக்றர், வட்டுக்கோட்டைகிழக்கு.

(3) ஸ்ரீ. வை. சிற்றம்பலம்
வட்டுக்கோட்டைகிழக்கு.

(4) ஸ்ரீ. க. சுப்பிரமணியம்
வட்டுக்கோட்டைமேற்கு.

(5) ஸ்ரீ. வே. சுப்பிரமணியம்
தொல்புரம்.



சிவமயம்.

## ஆசௌச விதி.

---

ஆசௌசமாவது பிண்டதானம் முதலியவற்றிற்கு நிமித்தகாரணமாய் உள்ளதும், புருஷனிலிருப்பதும், அசுத்தத்தை விளைப்பதும், காலம் ஸ்நானமென்பவற்றால் அகற்றப்படுவதுமாயுள்ளது.

சனனம் மரணம் தகனஞ்செய்திடல் சவத்தின் பின்போதல் சவஞ்சுமத்தல் கட்டியழுதல் ஆசௌசரன்னம் புசித்தல் ஆசௌசரோடு சம்பந்தித்தல் ஆசௌசமுடிவிலே சௌளஞ் செய்யாமை சபிண்டீகரணஞ் செய்யாமையென்னும் பத்தும் ஆசௌச நிமித்தங்களாகும்.

### சேனனம்

மூன்றாம் மாசத்திலாவது நான்காம் மாசத்திலாவது கருப்பமொழுகுதல் சிராவமாகும். ஐந்தாம் ஆறாம் மாசத்தில் கருப்பம் விழுதற்குப்பாதமென்று பெயராம். ஏழாம்எட்டாம் ஒன்பதாம் மாசங்களிற் பிறத்தல் அவப்பிரசவமாகும். பத்தாமாசத்திற் பிறத்தல் சுகப்பிரசவமாகும். சிராவத்திலும் பாதத்திலும் கருப்பம் நசிந்தால் மாதாவுக்கு மாசத்தோடொத்த தினங்கள் ஆசௌசமாகும். அவப்பிரசவத்திலும் சுகப்பிரசவத்திலும்பெண்பிறந்தால் நாற்பது தினமும் ஆண்பிறந்தால் முப்பது தினமும் ஆசௌசமாகும். சிராவம் பாதமிரண்டிலும் கருப்பம் நசிந்தால் பிதாவுக்கு முழுகச் சுத்தியாகும். அவப்பிரசவத்திலுஞ் சுகப்பிரசவத்திலும் பூரணாசௌசம்.

ஞாதிகட்கு சிராவத்தில்ஆசௌசமில்லை. பாதத்தில் முழுகச் சுத்தியாகும். அவப்பிரசவத்தினும் சுகப்பிரசவத்திலும் பிறந்திருந்தால் பூரணம். பிறந்திறந்தாலும் இறந்து பிறந்தாலும் உடன்சுத்தி. அவப்பிரசவத்தினும் சுகப்பிரசவத்தினும் பெண் பிறந்தால் சகோதரனும் பிதாவும் பிதாவின் சகோதரனும் அவனுடைய புத்திரர்களும் பிதாவின் பிதாவும் அவன் சகோதரனும் என்னுமிவர்களுக்குப் பூரணாசௌசம். ஏனையோர்க்கு ஆசௌசமில்லை. ஆண்பிறந்தால் ஏழுதலைமுறைவரையினராகிய சபிண்டருக்குப்பூரணாசௌசம். சபிண்டராவார் சமானதேசமுடையவர். அதன்மேற் பன்னிரண்டாந் தலைமுறைவரையினராகிய சமானோதகர்க்கு மூன்று நாளும், இன்னும் அறியப்பட்ட பெந்துக்களுக்கு ஒன்றரை நாளுமாசௌசமாகும். அவப்பிரசவத்திலே பிறந்து இறந்தாலும் இறந்து பிறந்தாலும் பிதாவுக்குப் பூரணமாகும். சுகப்பிரசவத்திலே பிறந்து இறந்தாலும் இறந்து பிறந்தாலும் ஞாதிகள் மரணாசௌசத்தை முழுக்கினாலே போக்கி சனனாசௌசத்தைப் பூரணமாக அனுட்டித்தல் வேண்டும். இனிச் சனனாசௌசத்தினுள்ளே என்றைக்கு இறநதாலும் மரணாசௌசத்தை முன் சொல்லியபடியே முழுகி நீக்கி சனனாசௌசமுழுதையும் அநுட்டிக்கத்தக்கது.

## பூரணாசௌச சங்கை.

பிராமணருக்குப் பத்துநாளும், சத்திரியருக்குப் பன்னிரண்டுநாளும், வைசியருக்கும் சற்சூத்திரருக்கும் பதினைந்துநாளும், அசற்சூத்திரருக்கு முப்பது நாளும் பூரணாசௌசமாகும்.



முற்காலத்திலே தாரகாவனத்திலே நாற்பத்தெண்ணாயிரமிருடிகள் வேள்வியே மிக்கபயனைத் தரும் இதற்கொரு கடவுள் வேண்டாமென்று வாதிக்கும் சித்தத்தை யொழித்து வேள்வி சிவனருள்கொண்டே பயன் தருமென்னும் உண்மையை வெளிப்படுத்தும்பொருட்டு, அப்பெருமானது திருவருளினாலே அம்முனிவர் மனைவியரிடத்திலே பிறந்த பெண்களாகிய உருத்திரகணிகை முதலெழுவர்களுக்கும் குழலூதுவோன் மத்தளமடிப்போன் வீணைவாசிப்போன் பாடுவோன் பரதன் என்னும் பஞ்சாசாரியர்களுக்கும் பதினைந்து நாளாசௌசமாகும்.

இது முற்காலத்தில் சைவாசார முடையவர்களுக்கே உரியது.

பிராமணர்முதலிய நான்குவருணத்தாருக்கும் தொழும்பு செய்யும் தாசருக்கு அவ்வவ்வெசமான்களோடொத்த ஆசௌசமாகும்; தூதப்பிராமணருக்குப் பதின்மூன்று நாளாகும்; கைக்கோளகன் இடையன் என்னுமிவர்களுக்கு முப்பது நாளாகும்; சாலியர்க்கும் பட்டாரியர்க்கும் முப்பத்தினாலு நாளாகும்; சிற்பாசாரியர்க்கும குயவர்க்கும் முப்பத்தைந்து நாளாகும். பாணர் இலைவாணிகர் * எண்ணெய்வாணிகர் வண்ணார் என்னுமிவர்களுக்கு முப்பத்தாறு நாளாகும். இழிந்தகுலப்பெண்ணும உயர்குலத்தாணும் கூடிப்பிறந்த பிரதிலோமர்களுக்கு எப்பொழுதும் ஆசௌசமுண்டு.

---

* இலைவாணிகர் – வெற்றிலைவிற்பவர் அல்லது இலைக்கறிவிற்பவர்.

### எல்லைகடந்தவாசௌசம்.

சனனாசௌசத்திற்குச் சொல்லிய தினங்கள் கழிந்தபின்னர்க் கேட்டறிந்த பிதாவானவன் நீரிலே முழுகச் சுத்தியாவன். ஞாதிகள் நீரிலே முழுகு தலும் வேண்டாம்.

ஆண் இறந்தால், நாமகரணம் வரைக்கும் ஞாதிகள் முழுகச்சுத்தியாகும்; பல் முளைக்கும்வரைக்கும் ஒருநாளாகும்; சூடாகருமம் வரைக்கும் மூன்று நாளாகும்; உபநயனம்வரைக்கும் அதினின்றும் அதிகமாகும்; அவ்வுபநயனத்திற்கு மேற்பட்டால் பூரணமாகும். முன்னே யதிகமென்றேம், அவையாவன; உபநயனம் வரைக்கும் பிராமணருக்கு ஐந்துநாளும், சத்திரியருக்கு ஆறுநாளும், வைசியருக்கு ஒன்பது நாளும், சூத்திரருக்குப் பன்னிரண்டு நாளுமாகும். உபநயனமாவது பிராமணருக்கு மவுஞ்சிபந்தனஞ் செய்தல், சத்திரியருக்கு விற்பிடித்தல், வைசியருக்குத் தராசுபிடித்தல், சூத்திரருக்கு இரண்டு புது வேட்டி தரித்தல்.

### நாமகரணாதிகளுக்குக் காலநியமம்.

பிராமணருக்குப் பன்னிரண்டாநாளும் சத்திரியருக்குப் பதினாறுநாளும் வைசியருக்கு இருபதாநாளும் சூத்திரருக்கு முப்பதாநாளும் நாமகரணஞ் செய்தற்குரியகாலமாகும். ஆறும் மாசத்தின்மேலே பல்முளைக்குங் காலமாகும், பிராமணருக்குப் பிறந்த தினந்தொடங்கி மூன்றும் வருடத்திலுஞ், சத்திரியருக்கு ஐந்தாம் வருடத்திலும், வைசியருக்கு ஏழாம் வருடத்திலுஞ், சூத்திரருக்கு ஒன்பது அல்லது பதினோராம்வருடத்திலுஞ் சூடாகருமஞ் செய்யுங்காலமாகும். சூடாகருமமென்பது குடுமிவைத்தல்.



கருத்தரித்ததினமாவது பிறந்தினமாவது தொடங்கிப் பிராமணருக்கு ஐந்துவயதிலும் அல்லது எட்டுவயசிலுஞ், சத்திரியருக்குக் கருப்பந் தொடங்கிப் பதினோராம் வயசிலும், வைசியருக்குப் பன்னிரண்டாம் வயசிலுஞ், சூத்திரருக்குப் பதினாறும் வயசிலும், உபநயனம் பண்ணுங்காலமாகும். இங்ஙனம் சொல்லப்பட்ட காலங்களிலே சொல்லிய கிரிகைகள் செய்யாவிடினும் ஆசௌசவிஷயத்திலே செய்யப்பட்டவற்றிற்குப் போலவே கொள்ளல் வேண்டும்.

### குமரணத்திற்பெண்மரணம்.

பெண்ணிறந்தால்சௌளகருமம்வரையும் ஞாதிகளுக்கு நீரிலே முழுகச்சுத்தி; எட்டுவயசுவரையும் ஒருநாளாகும்; மங்கிலியதாரம்வரையும் மூன்றுநாளாகும்; வாக்குதத்தம் மாத்திரம் பண்ணப்பட்டு வரையப்பெறாத பெண் மரணத்தில் அப்பெண்ணினது ஞாதிக்கும் பத்தாவினது ஞாதிக்கும் மூன்று நாளாசௌசமாகும்; அப்பெண்ணினது பிதாமாதாக்களுக்கும் கணவனது பிதாமாதாக்களுக்கும் பூரணாசௌசமாகும்.

### விசேடம்.

விவாகஞ் செய்துகொண்ட பத்தாவினது ஆசௌசம் மனைவிக்குமுண்டு, புத்திரனாவது புத்திரியாவது நாமகரணஞ் செய்யமுன்னே இறந்தால், ஒருவயிற்றின்கண் பிறந்தவர்க்கெல்லாம் மூன்றுநாளாசௌசமாகும்; நாமகரணத்தின்பின் இறந்தால், பூரணமாகும்; ஏழாந்தலைமுறையினராகிய சபிண்டருக்கு மூன்று நாளாசௌசமாகுமிடத்து, பன்னிரண்டாந் தலைமுறையினராகிய சமானோதகருக்கு

ஒருநாளாசௌசமாகும். இன்னும் சபிண்டருக்கு ஒருநாளாசௌசமாகுமிடத்து, சமானோதகர் நீரிலே முழுகச் சுத்தியாகும்.

### மூன்றுதினம்.

குருவுக்குஞ் சீடனுக்கும் வித்தியாவுபாத்தியாயருக்கும் தன்னுடன்பிறந்தாள் தாயுடன்பிறந்த மாமன் தாயைப்பெற்ற பாட்டன் பாட்டி தாயுடனே பிறந்த பெரியதாய் சிறியதாய் பெண்கொடுத்த மாமன் மாமி என்னுமிவர்களுக்கும் மூன்றுநாளாம்.

### துன்மிருதன்.

பசுகன்மமாகிய தீர்த்தயாத்திரையிலும் தேசாந்தரந் திரிதலிலும் மலைமுடியிலேறியும் நதியில் விழுந்தும் நெருப்பில் விழுந்தும் அன்னத்தை யொறுத்தும் உடம்பை வெறுத்தும் தீராதசயரோகம் குட்டவியாதி பெரியோர்கள் சொல்லைப் பரிகாரமாக நினைத்துக்கொண்டு மலைமுதலியவற்றிலே இறந்தவர்களுக்கு ஆசௌசமில்லை. நீரிலேமுழுகச் சுத்தியாகும்.

### பதிதன்.

சாதித்தருமம் சமையத்தருமம் ஆச்சிரமத்தருமங்களை அநுட்டியாது விட்ட பாவசொரூபியாகிய பதிதனானவன் இறந்தால், ஆசௌசமில்லை. முழுகச்சுத்தி. மந்திரத்தினாலே தகனஞ்செய்தல் எலும்பு பொறுக்கல் முதலாகிய யாதொருகிரியையும் இல்லை. அழுகை முதலானவையுமில்லை பிண்டோதக்கிரியை தானுமில்லை, சிராத்தகன்மமுமில்லை, அவன் செய்த பாவத்தினாலே அவனுக்கு அவனே சமமாமென்று சிவசாத்திரங்கள் முழங்குகின்றன.



### பிரமசாரி.

பிரமசாரிஇறந்தால்பிதாமுதலியோர்களுக்கெல்லாம் பூரணமாம்; ஞாதிகளுக்கும் பூரணமாம். இனிப் பிதாமுதலியோர்கள் இறந்தால் அப்பிரமசாரி நீரிலேமுழுக வுடன் சுத்தியாம். அப்பிரமசாரிகள் நைட்டிகப்பிரமசாரியென்றும் பௌதிகப்பிரமசாரியென்றும் இருவகைப்படுவர். உபநயனந்தொடங்கிக் கன்னிகாகலியாணகாலம் வரையும் விரதநியமித்துத் துறவியாய் இருப்பவன் பௌதிகப்பிரமசாரி, மரணகாலம் வரையும் விரதநியமித்து விவாகஞ்செய்யாது துறவியாய் இருப்பவன் நைட்டிகப் பிரமசாரி என்றுசொல்வர்.

### வானப்பிரத்தன் சந்நியாசி சைவாசாரியன் சாதகன்.

மனைவியோடும் வனத்திற்சென்று தவஞ்செய்கின்ற வானப்பிரத்தன், முற்றத்துறந்தவனாகிய சந்நியாசி, சைவாசாரியன், சாதகன் என்னுமிவர்கள் இறந்தால் இல்வாழ்வானுக் காசௌசமில்லை.

### தொடங்கியகருமம்.

தொடங்கிக்கொண்ட தானம் வேள்வி விவாகம் என்பவைகளிலும் இராசாக்களாலும் திருடராலும் வருந் தேசபீடையினும் ஆபத்துக்காலத்தினும் ஆசௌசம் வரின், அவ்வாசௌசம் சித்திபெறாது. அல்லாமலும் இன்னுந் தொடங்கி அநுட்டிக்கிற உத்தியாபனம் பண்ணும் விரதங்களுக்கு நடுவே இருவகையாசௌசம் வந்தாலும் அதற்குரிய தானம் பூசை யென்னுமிவற்றைச் செய்யாதுவிட்டு, விரதத்தை முறுகிய பத்தியுடனே யநுட்டிக்கவேண்டும்.

### நோயாளனுக்குச்சுத்தி.

வெந்நீரினாலும் முழுகச் சுத்தியில்லாத நோயாளனுக்கு ஆசௌசம் வருமாயின், ஊரின் புறத்தி

ளுள்ள நீர்க்கரையிலே அவனைவைத்து நோயில்லாதவன் அந்நோயாளனைப் பத்துமுறை வந்து வந்து தொட்டுப் புடைவையோடு முழுகில் நோயாளனிடத்தில் ஆசௌசம் இல்லையாம். பின்னர் தனது வீட்டையடுத்து நியமம் முதலிய கன்மங்கள் செய்யலாமென்று சொல்வர்.

### மகாகன்மந்தொடங்கினோர்.

மகாகருமங்களைத் தொடங்கினவர்க்கும் கன்னிகாதானந் தொடங்கினவர்க்கும் தேவோற்சவம் பிரதிட்டை செய்யத்தொடங்கின குருவுக்கும் அதனைச் செய்விக்கும் எசமானனுக்கும் அதற்குரிய பரிசாரகர்க்கும் சாந்திராயணமுதலிய விரதத்தைத் தொடங்கிக்கொண்டவர்க்கும ஓமம் சிராத்தகன்மம் வேதபாராயணம் முதலிய தொடங்கினவர்க்கும் தீர்த்தயாத்திரை தொடங்கிச் சென்றவர்க்கும் ஆசௌசம் வருமாயின், முழுகச் சுத்தியாம்.

போரின்கண்ணே இறந்தால் அவனைக்குறித்துப் பிதாமுதலியோர்களுக்கும் உடன் சுத்தியாம். அவனுக்குத தகனம்முதலிய கிரியைகளையும் உடனே செய்தல்வேண்டும். துன்மரணத்தவனுக்குப்போலக் கிரியைகள் காலமுடிவிலே செய்தல் கூடாது. முடிசூட்டி யாளுகைசெய்கின்ற இராசாவும் முறுகிய சிவபத்தியும் அதிபுத்திநுட்பமும் உடையமந்திரியும் எப்பொழுதும் சுத்தமுடையர்களாதலால் அவர்களுக்கு ஆசௌசமில்லை. நித்திய கன்மந் தொடங்கி முடிவதன்முன்னே ஆசௌசம் வருமாயின் முடியுமளவும் அவர்க்கும் இல்லை. ஆசௌசத்தின் முன்தொடங்கிய கிருச்சிரசாந்திராயண முதலிய விரதங்கள் ஆசௌசத்தினுள்ளே





முடிந்தால் எஞ்சிநின்ற நாள்வரையு மாசௌசமாம். ஆசௌசம் நீங்கியபின் விரதம் முடிந்தால் எல்லை கடந்த ஆசௌசத்தைப்போலக் கொள்க.

### துன்மரணம்.

துன்மரணமானது அறிந்துசெய்தலும் அறியாதுசெய்தலுமென விருவிதப்படும். இவற்றுள் அறிந்துசெய்த மரணத்துக்குச் சபிண்டருக்கு முழுகச் சுத்தியாம். இம்மரணத்தவனை மந்திரமில்லாமற் சுடல்வேண்டும். இதற்குச்சொல்லிய காலமுடிவிலே? தருப்பையினாலே வடிவுசெய்து சுடத்தக்கது. தருப்பைமுதலியவற்றால் வடிவமைத்து மந்திரத்தாற் சுட்டால் முன்னே இல்லையென்ற சபிண்டகூட்டத்தார்க்கு மூன்றுநாளாசௌசமாம். அறியாதுசெய்த துன்மரணத்தின் ஞாதிகளுக்கு அன்றுதொடங்கிப் பூரணாசௌசமாம். இம்மரணத்தவனுக்கு வேண்டிய உத்தரக்கிரியைகளைச் சுகமரணத்தவனைப்போல விதிப்படி செய்தல்வேண்டும். துன்மரணத்துக்குக் காரணமாவன; இடிவிழும்பொழுது மனந்துணிந்து புறப்படல் பாம்பின்மேல் விழுதல் சுவர்விழுதற்குமுன்னே அதனிடையிற்சென்று விழுதல் நெருப்பில் விழுதல் கூரியவாயுதங்களினாலே இறத்தல் மலையிலே மரத்திலேயேறி விழுதல் வன்மனமுடையராகி நஞ்சையுண்டல் என்னுமிவற்றால் இறந்தவனுக்கு ஆறுமாதத்தினாவது அல்லது ஒருவருடத்தினாவது தருப்பையினாலே வடிவஞ்செய்து சுகமரணத்துக்குப்போலச் சுடல்வேண்டும். நெருப்பு நஞ்சுமுதலியவற்றாலே உடம்பைவிட்டுத் துன்மரணமடைந்தாலும், நியம நிட்டையை விட்டவன் கோளன் மூர்க்கன் பொய்வேடம்பூண்டவன்

என்னுமிவர்கள் சுகமரணமடைந்தாலும், இங்ஙனங்
கூறிய விருதிறத்தாராலும வரு மாசௌசமானது
மயானத்திலே நெருப்புப்பற்றியெரிந்து சாம்பராகிற
அளவில் சபிண்டருக்கு நீரிலே முழுகச் சுத்தியாம்.

### ஆசௌசதிரவியம்.

ஆசௌசமானது ஆசௌசமுடையவனது
பொருள்களுக்குமுண்டு. அவனுக்குச் சுத்தி வருங்
காலத்தில் அப்பொருள்களுக்கும் புரோட்சணத்
தால் சுத்திவரும். சனனமரணம் வருதற்குமுன்னே
யறிந்து புத்தியினால் பிரித்து முக்கிய தருமங்களுக்
கென்று நியமித்துவைத்த பொருள்களுக்கும் அதன்
முன்னும் வேறுபிரித்துவைத்த பொருள்களுக்கும்
ஆசௌசமில்லை. அப்பொருள்களாலே தானதரு
மங்கள் சிவபூசைமுதலிய சற்கன்மங்கள் செய்தற்கு
யோக்கியமாம். ஆசௌசம் வருதற்குமுன்னே
வேறுபிரித்து வையாதபொருள்களுள்ளும் சிலபொ
ருள்களுக்கில்லையென்று சொல்வர்கள். அவையா
வன; தானியம் பொன் பசுநிரை ஆடு வெல்லம் நறு
நெய் பால் தயிர் எள்ளு கரும்பு பச்சைக்கறி தண்
ணீர் உப்பு விறகு தைலம் அவுடதம் புழுங்கலரிசி
எள்ளு என்னு மிவைகளெல்லாம் யோக்கிய
முள்ளனவாம். இவைகளையெல்லாரும் கொடுக்கல்
வாங்கல் பண்ணலாமென்று சிவாகமங்கள் சாற்று
கின்றன.

### சேனனகாலம்.

ஒருவனுக்குப் புததிரன் பிறக்குங்காலத்தில்
பிதாமாதாமுதலியோர்க்கும் அங்ஙனமுள்ள பொ
ருள்களுக்கும் கொப்பூழ்க்கொடி யரியுமவரையும்
ஆசௌசமில்லை. அங்ஙனம் தேவர்களும பிதிர்



களும் வருங்காரணத்தினாலே தானம்முதலிய சற்
புண்ணியங்கள் செய்யலாம்.

### கிராமம்.

ஒருதெருவில் பன்னிரண்டு கோலளவினதாகிய
தூரத்தினுள்ளே பிணங்கிடந்தால் அது எடுக்கும்
வரையும் அங்கே சிவபூசை முதலிய கன்மங்கள்
செய்யலாகாது. பிணமெடுத்தபின்னர்ச் செய்ய
லாம். பதினொரு விற்கிடை தூரத்தினப்பாலானால்
அடுத்தவீதியிலே வேதமோதல் சிவபூசை ஓமம் முத
லானவைகளெல்லாம் செய்யலாமென்று சொல்வர்
கள். வில்லாவது நான்குமுழங்கொண்டது. சிவ
பூசை செய்யும்பொழுது ஆசௌசம் வந்தால் மந்திர
மில்லாமல் குறைப்பூசையை முடித்தல்வேண்டும்.

அக்கினிவேட்டற்குரிய பிராமணருக்குத் தக
னந்தொடங்கி ஆசௌச வாரம்பகாலமாம். அக்
கினிவேட்ட லில்லாதவர்க்கு இறந்தநாள் முதலாக
வாரம்பமாகும். இராத்திரிகாலமாதல் சூரியனுத
யஞ்செய்ய முன்னாதல் பெண்களுக்குப் பூப்புவரு
வதைக்கண்டாலும் சனனமரணம வந்தாலும் அந்த
நாள்முதலாக ஆசௌசத்தைக் கணக்கிடல்
வேண்டும்.

### ஆசௌசத்தின் நடுவே ஆசௌசம்வருதல்.

செனனாசௌசத்தினிடையே செனனாசௌசம் வந்
தாலும், மரணாசௌசத்தினிடையே மரணாசௌசம்
வந்தாலும், முன்வந்த ஆசௌசத்துடனே பின்வந்
தது நீங்கும். மரணாசௌசத்தினுள்ளே சனனா
சௌசம் வந்தாலும் அவ்விதமாம். சனனாசௌசத்
தினுள்ளே மரணாசௌசம் வந்தால்போகாது.
ஆசௌசம் முடிந்ததினத்தினும் காலைப்போதினும்

வேறுசௌசம்வந்தால் முறையே இரண்டுநாளும் மூன்றுநாளும் அதிகமாக எண்ணி அநுட்டித்தல் வேண்டும்.

பெரிய மரணாசௌசத்தினுள்ளே மூன்றுநாள் முதலிய அற்ப மரணாசௌசம் வந்தாலும், பெரிய செனனாசௌசத்தினுள்ளே சிறியசெனனாசௌசம்வந்தாலும் பெரிதினாலே சிறியது நீங்குமென்று சொல்வார்கள். சிறியதினாலே பெரியது நீங்காது.

எல்லைகடந்த ஆசௌசம்.

சபிண்டகணங்களுக்கு ஆசௌசத்தினுள்ளே கேட்டறிந்தால் ஆசௌசம் நின்றநாள்வரையுமாம். மூன்று மாதத்தினுள்ளே கேட்டால் மூன்றுநாளாம். ஆறுமாசத்துள்ளாகில் ஒன்றரைநாளாம். அதன் மேல் வருடமளவும் ஒருதினமாம், வருடத்தின் மேலாகில் முழுகச் சுத்தியாம். இவ்விதி சபிண்ட கூட்டத்தார் யாவருக்குமாம்.

எலும்பு பெறுக்கலாகிய சஞ்சயனக்கிரியை செய்யமுன் பிதாமாதா மாற்றாந்தாய் என்னுமிவர்கள் மரணத்தைக் கேள்வியாலறிந்த புத்திரனுக்கு நின்ற குறைநாள்வரையுமாகும். எலும்புபெறுக்கிய பின்பு வருடத்துள்ளே முன்சொல்லிய மூவர்மரணத்தையும் கேட்டறிந்தால் அந்தியேட்டி முடிந்தாலும் முடியாவிட்டாலும் பூரணாசௌசமாகும்.

[செனனாசௌச மரணாசௌச காலத்திலே சிவபூசை குருபூசை அக்கினிபூசை யோமம் என்னுமிவற்றை விடப்படாது. சிவமந்திரத்தாலே ஸ்நானஞ்செய்ய யோக்கியனாவன். அவனைத் தாமரையில் நீர்போல ஆசௌசம் மருவியும் மருவாமலு



மிருக்குமென்று சொல்வார்கள். சிவதீட்சையினாலே மும்மலங்களையும் நசித்தவனாதலாலே அவனுடைய சரீரம் சுத்தமென்று சொல்வர். பூசைமுடிவின்கண் ஆசௌசம் அவனை மருவும் ஆதலால் ஒன்றைவிரும்பிச்செய்யும் காமியகன்மங்கள் செய்தல் கூடாது.

தனது சோகத்தினாலே சிவபூசையை ஒருகாலந் தொடங்கி நான்குகாலம்வரைக்கும் செய்யாதுவிட்டால் பரிகாரஞ்செய்தல் வேண்டும். பரிகாரஞ் செய்பாதுவிடின் நரகபுவனத்தைக் காணியாக ஆள்வர்கள். சிவபூசை செய்யாமற் புசித்தவன் புழுவைப்புசித்தவனாவன். ஓமஞ்செய்யாது புசித்தவன் மலத்தைப் புசித்தவனாவன். சிவமூலமந்திரமுதலியவற்றைச் செபியாமல் மறந்தாயினும் பானம்பண்ணினவன் மூத்திரத்தையும் சுக்கிலத்தையும் குடித்தவனாவன். ஆதலால் யாவரும் ஆபத்துவந்தாலும நியமத்தை வழுவாமல் செய்தல்வேண்டும்.

நீர்விடாமல் விபூதியை யணிந்து சிவபூசையைப் புறத்திலே செய்யும விதத்தைச் சொல்வேம்.

தனதாசிரியனைக் கொண்டாயினும் தன்னோடொத்த தீட்சையுடையவனைக் கொண்டாயினும் உடையவர் பூசையை விதிப்படி செய்வித்துப் பூசைமுடிவிலே புறமண்டபத்தினின்றும் பத்தியுடனே சிவபிரானைத் தத்துவமந்திரமூன்றினாலும் மூன்றுதரம் புட்பாஞ்சலி செய்தல்வேண்டும். ஆசௌசம் முடிந்தபின்பு சிவபூசையைச் செய்தல்வேண்டும.

ஆசௌசமுடையராயவிடத்து பிராமணர் சத்திரியர் வைசியர் சூத்திரரென்னும் நான்குவருணத்தாரும் சிவாலயத்தின் ஐந்தாம் வீதியிலே பிரவேசிக்

கலாம். அதனுள்ளிருக்கின்ற சபாமண்டபத்திலே முதன்மூன்றுவருணத்தாரும் பிரவேசிக்கலாம். நான்காம் வருணத்தவர் அதனுள்ளே பிரவேசித்தால் பஞ்சகவ்வியத்தால் புரோட்சித்தல்வேண்டும். செனனாசௌசமரணாசௌசமுடையவர் தீண்டிய புட்பம் பாண்டம் முதலியவற்றை யாவரும் கழித்துவிடல் வேண்டும். அவற்றைச் சிவபூசைக்குபயோகித்தால் அகோரமந்திரத்தினால் நூறுயிர ஓமஞ் செய்தல் வேண்டும்.

### உருத்திராக்ஷம்.

செனனாசௌச மரணாசௌசகாலங்களிலும் மலசலமோசிக்கும் பொழுதும் பெண்போகம் அனுபவிக்கும்பொழுதும் மற்றைய வாசௌசகாலங்களிலும் உருத்திராட்சத்தைத் தொட்டு உடம்பிலே யணிதல்கூடாது. அக்காலங்களிலே யணிந்தால் வயசு சுருங்கும், மந்திரத்தினாலே செவியிலும்சிவார்ச்சனை செய்யுங்கையிலும் அணிந்த மணிக்குத் தோஷமில்லை. மற்றையவையாகாது.

### ஆசௌசநானம்.

செனனாசௌச மரணாசௌசம் பூப்பு வந்த ஆசௌசமுடிவில் சங்கவகாலத்தில் ஸ்நானஞ்செய்து சுத்தாசமனஞ் செய்யப் பிராமணருக்குச் சுத்தியாகும். முன்சொல்லிய காலத்தில் நீரிலே முழுகி வாகனம் முதலியவற்றைத் தொடச் சத்திரியருக்குச் சுத்தியாகும், நீரிலே முழுகித் தராசுகோலைத் தொட வைசியருக்குச் சுத்தியாகும். அக்காலத்தில் நீரிலே முழுகி உழவுகோலைத் தொடச் சூத்திரருக்குச் சுத்தியாகும். சங்கவகாலம்-ஆறுநாழிகையின்மேல் பன்னிரண்டு நாழிகைவரையுமுள்ளகாலம்.





செனனாசௌசத்தைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகம் மரணாசௌசம். அதனைக் காட்டிலும் பூப்புவந்த பெண்களது ஆசௌசம் இருமடங்கதிகம், அதனைக்காட்டிலும் பிரசவித்தவளுக்குள்ள ஆசௌசம் இருமடங்கதிகம், அதனைக்காட்டிலும் தகனஞ் செய்தலினால் வருமாசௌசம் இருமடங்கதிகம். அத்தகனாசௌசமும் இருவிதப்படும். பிதாவுக்குச் செய்த தகனாசௌசம் ஒன்றுதவிர மற்றையோர்க்குச் செய்த தகனாசௌசம் தகனாசௌசத்துடனே நீங்கும். அத்தகனாசௌசமும் இருவிதப்படும். அதில் முந்தினது சரீரதகனம். பிந்தினது இறந்தவனது சரீரமாக வுருவஞ்செய்து அக்கினியிலே தகித்தல். முந்தினத்தில் சபிண்டருக்கு ஆசௌசக்குறைவில்லை. கயம் குட்டம் வைசூரிமுதலிய நோயினாலும் அரசனாலும் திருடராலும் துட்டமிருகத்தினாலும் யானையாலும் பாம்பினாலும் நீரினாலும் நெருப்பினாலும் மரணமடைந்த பிணத்தைப் புதைத்தல்வேண்டும்.

அல்லது மந்திரமில்லாமல் தகனஞ்செய்தலும் விதியாகும். இம்மரணத்தவர்க்கு ஆறுமாசம் அல்லது ஒருவருடஞ் சென்றபின்னர் எலும்பினாலாயினும் பலாசிலையினடிக்காம்பினாலாயினும் மாவினால் தருப்பை கோமயத்தினாலாயினும் வடிவுசெய்து, மந்திரத்தால் தகனமுதலிய கிரியைகளைச் செய்தல் வேண்டும். இத்துடன் மரணமடைந்தவர்களுள்ளே தீட்சையுடையோர்க்கும் முத்தியை விரும்பினவர்க்கும் பசாசபோகத்தினின்றும் நீங்கும்பொருட்டு அகோரமந்திரம் ஓரிலக்கம் உருச்செபித்து உருத்தி

ரனுக்குப் பலியுமுதவி மாவிரதராயினும் பாசுபதராயினும் எட்டுப்பேரைப் பூசித்து அமுதுசெய்வித்து வஸ்திரமுதலியதானங்களைக் கொடுத்து அனுப்பிய பின்பு முழுகித் தருப்பைமுதலியவற்றால், பண்ணிய அவ்வுருவத்தைப் பஞ்சகவ்வியத்தாற் சுத்திசெய்த பின்பு அந்தியேட்டிக்கிரியையைச் செய்து அதனாலே ஆன்மாவைச் சிவபதத்திற் சேர்த்தியபின்னர் தகனஞ் செய்தல்வேண்டும். அத்துன்மரணமடைந்தவரை எலும்பினாலே தகனஞ்செய்யும்பொழுது அவ்வுருவத்தைப் பசுவின்பாலினால் சுத்தமாதற்பொருட்டு முழுக்காட்டல்வேண்டும்.

அன்னியதேசாந்தரம் போய்ப் பன்னிரண்டு வருடம்வரைக்கும் திரும்பவராமற் போனவர்களைக் கண்டோம் கேட்டோம் என்று ஒருவருஞ் சொல்லாதிருந்தால் அதன்மேல் அவர்க்குத் தருப்பையினாலே வடிவுசெய்து மந்திரத்தால் விதிப்படி தகனஞ்செய்தல்வேண்டும். மனைவியிருந்தால் அவளை யமங்கலையாக்கல்வேண்டும். பின்பு அன்னியதேசம் போனவன் வந்தால் அவ்வமங்கலையை உத்தரியத்துடனே மங்கிலியந்தரிக்கவேண்டும்.

சவத்தின்பின்போதல்.

உறவினரும் உறவில்லாதவரும் சவத்தின் பின்னே சென்றால் அக்கினி தொடல் உருக்கியநெய் குடித்தல் திரும்பவும் நீரிலே முழுகுதல் பிராணாயாமஞ்செய்தல் என்னுமிவைகளினாலே சுத்திவரும். பிராமணன் சூத்திரச்சவத்தின்பின்னே சென்றால் மூன்றுநாள்வரைக்கும் ஆசௌசமாகும். சூத்திரப் பிணத்தின்பின்னே சத்திரியனும் வைசியனும் சென்றால் இரண்டுநாள்வரைக்குமாகும். பிராமணன் சத்



திரியன் வைசியன் என்னுமிவர்கள் காயத்திரிமந்திரத்தை ஆயிரத்தெட்டுருச்செபித்து நீரிலே முழுகச் சுத்தியாகும். பிராமணச்சவத்தின்பின்னே சூத்திரன் சென்றால் நீரிலேமுழுகச் சுத்தியாகும். சத்திரியனும் வைசியனும் அப்பிணத்தின்பின்னே சென்றால் நீரிலே முழுகி அக்கினியைத்தொட்டு நெய்பருகச் சுத்தியாகும். பிராமணன் சத்திரியப்பிணத்தின் பின்னே சென்றால் ஒருநாள்வரைக்கும் ஆகும். செட்டிப்பிணத்தின்பின்னே சென்றால் இரண்டுநாள் வரைக்கும் ஆகும். இன்னும் சிலசாத்திரங்கள் பிராமணன் செட்டிப்பிணத்தின்பின்னே சென்றால் ஒன்றரைநாள்வரைக்காசௌசமென்றும் காயத்திரி நூற்றெட்டுருவினாலும் முழுக்காலும் சுத்தியாகுமென்றுஞ் சாற்றுகின்றன.

சவஞ்சுமத்தல்.

அரசனும் செட்டியும் சூத்திரப் பிணத்தின் பின்னே சென்றால் அரசனுக்கு ஒன்றரைநாளும், செட்டிக்கு ஒருநாளாகும். சூத்திரன் சூத்திரப் பிணத்தைத் தொட்டாலும் பின்னேசென்றாலும் ஒருதினம் அல்லது ஒருகாலமாகும். சமானோதகர் சவத்தைச் சுமந்தால் பூரணமாகும். உபநயனம் பெறாத சிறுவர் இறந்தபிணத்தை ஏழுதலைமுறையினராகிய சபிண்டர் சுமந்தால் பூரணமாகும். மாதாவழிப் பெந்துக்கள் சுமந்தால் மூன்றுநாளாகும். அயற்சாதியார் சுமந்தால் சவமென்னசாதியோ அவ்வளவாகும். சம்பந்தமுடையவராகிய வொத்தசாதியார் சுமந்தால் ஒருகாலம்வரைக்குமாகும், ஒருகாலமாவது சூரியோதயம் தொடங்கி நட்சத்திரம் உதிக்கும்வரைக்குமாகும். அல்லது

நட்சத்திரமுதித்தல் தொடங்கி சூரியோதயம் வரைக்குமாகும். இங்ஙனஞ் சொல்லிய காலம் வரைக்கும் ஊருக்குப்புறத்திலேயிருந்து முழுகி அக்கினியைத்தொட்டுப் பஞ்சகவ்வியமாயினும் நெய்யாயினும் குடித்து சுத்தமுடையவராகி வீட்டுக்கு வருதலே நியாயமாகும்.

கூலிக்குப்பிணஞ்சுமப்பவர்க்குச்சொல்வோம்.

அயலார் சுமந்தால் சபிண்டரைக்காட்டிலும் இரண்டுமடங்கதிகமாகும். ஒத்தசாதியார் சுமந்தால் சவசாதிக்குள்ள ஆசௌசமாகும். துறவிகளிறந்தபிணத்தையும் உதவியில்லாத அநாதப்பிணத்தையும் சுமந்தால் நீரிலேமுழுக உடன்சுத்தியாகும்; மிகப்பெரிய புண்ணியமுமாகும். அவருக்கு அந்தியேட்டிமுதலிய கிரியைகளைச்செய்தால் முன்சொல்லிய புண்ணியத்திலும் மிகப்பெரியதாகும். சுத்தசைவர்கள் சைவப்பிணத்தைச் சுமந்தாலும் தொட்டுத் தகனஞ்செய்தாலும் அகோரமந்திரம் இருநூறுருச்செபிக்கச் சுத்தியாகும்.

தீட்சையுடையோரையும் பிராமணரையுஞ் சாத்திரத்திற்சொல்லிய நியமமுடையவராயினும் நியமமில்லாதவராயினும் சுமந்தால் அவமிருத்துப்போகுமென்று சொல்வார்கள். தீட்சையுடையவன் தீட்சையில்லாத பிணத்தின்பின் செல்லக்கூடாது. சென்றால் நீரிலே முழுகி சிவமந்திரம் நூறுருச்செபிக்கச் சுத்தியாகும். தீட்சைபெறாத சபிண்டர்கள் தீட்சையில்லாத பிணத்தைத் தொடல் தோஷமாகும். சிவதீட்சையுடையவர் தீட்சைபெறாத பிணத்தைத் தொடலாகாது. தொட்டால் ஊருக்குப் புறத்திலே ஒருகாலம்வரைக்குமிருந்து நீரிலேமுழுகி நெருப்





பைத்தொட்டு நெய்குடித்து பதினொருமந்திரம் இருநூறுருச்செபித்து அத்தினம் முழுதும் உபவாசம் இருக்கச் சுத்தியாகும். எண்ணெய் தலைக்கிட்டுக்கொண்டு மனிதருடைய எலும்பைத்தொட்டால் அகோரமந்திரம் நூறுருச்செபிக்கச் சுத்தியாகும். எண்ணெயிடாமல் எலும்பைத் தொட்டால் முழுச்சுத்தி; அல்லது சூரியதரிசனஞ்செய்து ஆசமனம்பண்ணச் சுத்தியாகும். சூத்திரன் சூத்திரச் சவத்தைத் தொட்டழுதால் ஒருதினம்வரைக்குமாகும்; தொடாமல் அழுதால் எலும்பு பெறக்குமுன்னாகில் ஒருகாலம்வரைக்குமாகும். அதன்பின்னாகில் முழுகச்சுத்தியாகும். சத்திரியன் வைசியன் என்னுமிவர்கள் தஞ்சாதியிலுள்ளோர் எலும்புபெறக்குமுன் அழுதால் புடைவைமுதலானவையெல்லாம் தோயும்படி முழுகச்சுத்தி பின்னழுதால் முழுகச்சுத்தி. பிராமணர் தஞ்சாதியுள்ளோர் எலும்புபெறக்குமுன் அழுதால் முழுகச்சுத்தி. பெறக்கியபின் அழுதால் ஆசமனம் பண்ணச்சுத்தி.

பிராமணர் சத்திரியர் வைசியர் என்னுமிம் முக்குலத்துள்ளும் உயர்ந்தவனைக்குறித்துத் தாழ்ந்தவன் அழுதால் எலும்புபெறக்கமுன்னாகில் முழுகச்சுத்தி பெறக்கியபின்னாகில் ஆசமனம்பண்ணச் சுத்தி. கீழ்வருணத்தவனை நினைத்து மேல்வருணத்தவன் அழுதால் எலும்புபெறக்கமுன்னாகில் ஒருநாள்வரைக்குமாகும்; பின்னாகில் முழுகச்சுத்தியாகும். சத்திரியனும் வைசியனும் சூத்திரனை நினைத்து அழுதால் எலும்புபெறக்கமுன்னாகில் இரண்டுநாளாகும்; அதற்குமேல் ஒருதினமாகும். பிராமணன் சூத்திரனை நினைத்து அழுதால் எலும்புபெறக்கமுன்னாகில் மூன்றுநாளாகும்; பின்னாகில் ஒருநாளாகும்.

## ஆசௌசிஅன்னமருந்தல்.

ஆசௌசமுடையவ ரன்னத்திலும் ஆசௌசமுண்மையால், அதனைப் புசித்தவர்க்கும் ஆசௌசம் உண்டு, இது இருவிதப்படும். அறிந்ததென்றும் அறியாததென்றுமாம். அறிந்துபுசித்தல் ஆசௌசமுடிவிலேநீங்கும். பஞ்சம் முதலியவற்றால் எத்தனைநாளுண்டாலும் அத்தனைநாள்வரைக்குமாகும். அறியாதுபுசித்தால் செரித்துவிழும்வரைக்குமாகும். இவர்க்குப் பரிகாரஞ்சொல்வேம். பத்துநாள்வரைக்கும். பசுவின்பால்குடித்துப் பின்னர் சாந்திராயண விரதமனுட்டிக்க. அல்லது அகோரமந்திரம் ஆயிரமுருச்செபித்தல்வேண்டும். இருதுசாந்தியில் அன்னம், கருப்பங்கொண்ட மூன்றும்மாதத்திற் செய்கின்ற புஞ்சவனத்தில் அன்னம், சீமந்தத்தில் அன்னம், என்னுமிவைகளைப் புசித்தவர்களும் முன்சொன்னபடியே பரிகாரஞ்செய்தல்வேண்டும். ஆன்மாவை வலாற்காரமாக விட்டிறந்தவனது சிராத்தத்தில் ஒருவருடத்துள்ளாகப்புசித்தால் அகோரமந்திரம் பதினாயிரமும் அவனது ஏகோதிட்டத்திற்கும் பதினாயிரமுருவும் செபித்தல்வேண்டும். அல்லது சுத்தியாகாது. நவச்சிராத்தம் நக்கினம் ஏகோதிட்டசிராத்தம் சபிண்டீகரணம் என்னுமிவைகளிற் புசித்தவர் நன்மரணமாயின் அகோரமந்திரம் ஆயிரம்உரு தனித்தனி ஒவ்வொன்றுக்கும் செபித்தல்வேண்டும். பத்தாநாள் பன்னிரண்டாநாள் புசித்தால் அகோரம் முந்நூறு முந்நூறு செபித்தல்வேண்டும். யோக்கியதையையுடைய சிவச்சிராத்தத்தில் புசித்தவர்க்கு மிதுசத்தமுண்டு. இங்ஙனஞ் சொல்லிய சிராத்தங்களிலேபோய்ச் சோறுபுசித்தவன் சோறுசெரித்து விழுந்தபின்னர் முழுகி முன்சொன்னபடியே பரிகா-





ரம் செய்தல்வேண்டும். பின்னர் சிவபூசைசெய்தல் வேண்டும். இவ்வாறு செய்யாவிடின் ஆசௌசம் நீங்காது.

## ஆசௌசிசம்பந்தம்.

சம்பந்தாசௌசமாவது ஆசௌசருடனே கூடியிருத்தல் படுத்தல் அவர்பந்தியில் இருந்து போசனம்பண்ணல் முதலியனவாகும். எவ்வளவுநாள்வரைக்கும் சகவாசஞ்செய்தார்களோ அவ்வளவு நாள்வரைக்கு மாசௌசமுண்டு.

பிணத்தைத் தொட்டவர் சுமந்தவர் கின்று பிணம்சுட்டவர் தூரஸ்திரியைத் தொட்டவர் நீரிலே மூன்றுமூன்றுமுறை முழுகல்வேண்டும். பிரசவித்தவளைப் பார்த்தல் பேசல் கூடாது. ஆசௌசி தொட்ட பச்சைப்பொருள்கள் தவிர மற்றையவையெல்லாம் விலக்கல்வேண்டும். ஆசௌசிதொட்ட அன்னத்தைப் புசித்தாலும் அருவருப்புள்ள மயிர் கிருமி கலந்த அன்னத்தைப் புசித்தாலும் பலா தருப்பை சங்கபுட்பம வில்வம் முதலிய இலைகளைத் துவைத்து சாற்றைப் பருகச் சுத்தியாகும். செனனாசௌச மரணாசௌசமுடிவிலே மயிர் முண்டிதம் பண்ணாதிருந்தால் ஆசௌசம் நீங்காதென்று எம்பெருமான அருமைத் திருவாக்கால் பொழிந்த ஆகமங்கள் மொழிந்திடுகின்றன.

## வபனம்.

மனைவி கருப்பிணியாகியபொழுது பத்தாவானவன் சவத்தின்பின்போதல் வபனங்கொள்ளல் சமுத்திரதீர்த்தமாடல் நகங்களைதல் சிராத்தத்திற் புசித்தல் வீடுகட்டல் நெடுந்தூரத்திற் செல்லுதல் கல்யாணஞ் செய்தல் முதலியனவாகாது. இவற்றைச்செய்தால்

பிறக்கும்பிள்ளைக்கு வயசு சுருங்குமென்று சொல்வர்கள். இரண்டுமனைவிமார்களுள்ளே ஒருத்தி பிரசவித்தால் பிறந்த புதல்வனைக்குறித்துப் பிதா வபனங்கொள்ளல்கூடாது. மற்றைய நாமகரணங்கள் முதலிய கன்மங்கள் செய்யலாம்.

பிதா மாதா மாமன் தமையன் குரு பெண்கொடுத்தவன் என்னுமிவர்களும் மனைவிமாரும் இறந்த தினத்திலே கருப்பமுடையவனாயிருந்தாலும் வபனங்கொள்ளல்வேண்டும். மாதாவுக்குச் செய்த கிரியையினுள்ளே பிதாவிறந்தால் தகனக்கிரியையல்லாமல் வபனம் ஆகாது. பிதாவுக்குச் செய்த கிரியையினுள்ளே மாதா இறந்தால் தகனம் வபனம் இரண்டும் செய்யலாகும், இராத்திரி காலத்திலே தகனகன்மஞ்செய்தால் மற்றையநாள் வபனங்கொள்ளல்வேண்டும். சபிண்டீகரணம் செய்யாதிருந்தால் அது செய்யும்வரைக்கும் ஆசௌசம் அக்கர்த்தாவானவனை விட்டு நீங்காதென்று சொல்வர்கள். அச்சபிண்டீகரணம் பிரேதத்தன்மையை நீங்கும்பொருட்டுச் செய்யுங்கிரியையாகும். அது நீங்கிய மற்றைய தகனம் முதலியவெல்லாம் பிரேதகன்மங்களாகும். அவைகளாவன தகனம் பாடாணத்தாபனம் நீரினாற்செய்கின்ற தர்ப்பணம் பிண்டமிடுதல் எலும்புபெறுக்கல் நிருவாணம் மூடுதல் ஏகோத்தர விருத்திபோசனம் நவச்சிராத்தம் ஏகோதிட்டம் பஞ்சதசசிராத்தம் சோதகும்பசிராத்தம் என்னுமிவைகளெல்லாம் முன்னேசெய்யவேண்டிய கிரியையாகும். இவை பிரதானனுக்கும் அப்பிரதானர்களுக்கும் பொதுவாகும். பஞ்சம் - ஐந்து. தசம் - பத்து. இதனை மாசிகமென்றும் சொல்வர்கள். அச்சபிண்



டீகரணம் பிரதானனாகிய கன்மாதிபன் செய்யுங்கிரியையாகும். மற்றைய தகனம் முதலியவற்றிற்கு அப்பிரதானங்களும் அதிகாரியாவர்கள். அதிகாரிகள் இருபதின்மரது பெயரும் முறையும் வருமாறு புத்திரன் மனைவிமகள் சகோதரன் இவர்கள் புதல்வர் மாதா மருமகள் சகோதரி அவளது புதல்வன் சபிண்டர் சமானோதகர் மாதாவழிச் சபிண்டர் சமானோதகருடைய புதல்வர் சீஷன் குரு மருகன் தோழன் அரசன் என்னுமிவர்களே முன்சொல்லிய அதிகாரிகளாவர். இவர்களுள்ளே முக்கிய கர்த்தா புத்திரனாகும். அப்பிரதானர்கள் மற்றையோர் புத்திரனாகிய பிரதானனில்லையாமின் மற்றைய அப்பிரதானர்கள் கன்மாதிபராகலாமென்று சொல்வார்கள். புத்திரனிருந்தால் அப்பிரதானர்களுக்கு அதிகாரமில்லையென்று சொல்வார்கள். சிலசாத்திரம் புத்திரன் சகோதரன் அவனது புதல்வர்களும் தகனவதிகாரிகளாமென்றுஞ் சாற்றுகின்றனர். (பாடாணத்தாபனமென்பது கல்லுத்தாபித்தல்).

மேற்சொல்லிய முக்கியகர்த்தாவுக்கு ஐந்துவித சுத்தியுண்டு. அவற்றின் பெயரும் பருவமுஞ் சொல்வேம். தகனாந்தம் பிண்டாந்தம் எலும்பு பெறுக்கன் முடிவு ஏகோதிட்டத்தினத்தந்தம் சபிண்டீகரணாந்தம் என்பதே பஞ்சசுத்தி. சௌளத்திற்கு முன்னே புதைத்தல், ஐந்து வயசிற்கு முன்னே பிண்டமிடுதல் எட்டுவயசினுள்ளே எலும்பு பெறுக்கல், பன்னிரண்டு வயசினுள்ளே ஏகோதிட்டம், அதற்கு மேற்பட்டால் சபிண்டீகரணம் என்பதே ஐவகைப்பருவமாகும். மற்றைய விரண்டாங் கருத்தாவுக்கி ஏகோதிட்டவரையாகிய நால்வகைச் சுத்தியாகும்.

இனிச் சைவசமயத்திலே சமயப்பிரவேசஞ் செய்த சமயி, விசேடதீட்சை பெற்றுச் சிவபிரானுக்கும் தேவிக்கும் புத்திரனாகிய புத்திரன் நிருவாணதீட்சை பெற்ற சாதகன், போதகாசிரியன் என்னுமிவர்கள் இறந்தால் அநுட்டானம் முதலிய சமயாசாரங்களினின்றும்வழுவிய பாவங்கள் நீங்கித் திவ்வியசிவரூபம் பெறும்பொருட்டு, ஆசாரியராலே அந்தியேட்டி செய்வித்துப் பின்னர் சிவசொரூபமாகிய அவனது தேகத்தைச் சிவாக்கினியில் ஆகுதி செய்தல் வேண்டும். வபனம் நக்கினமூடல் கூர்ச்சதாபனம என்னுமிவற்றை முறையே செய்து சமயி புத்திரன் என்னுமிவர்களுக்காகக் கந்தர் சண்டர் கணேசர் என்னும் தேவர்களுக்கு அவர் திருநாமத்தைச் சொல்லி, தனித்தனியே வாசோதகம் குசோதகம் திலோதகம் என்னுந் தர்ப்பணமுங் கொடுத்தல் வேண்டும். சாதகன் போதகன் என்னுமிவர்களுக்கு ஈசன் சதாசிவமூர்த்தி சாந்தர் ஆகியவிவர்கள் திருநாமத்தைச் சொல்லி மும்மூன்று தர்ப்பணமும் முன்போலப் பிண்டதானமும் தர்ப்பணத்தினளவும் போசனமும் செய்தல்வேண்டும். இரண்டாநாள் முதலாக ஆசௌசம் முடியும்வரைக்கும் தினமொரு தர்ப்பணம நீரினாலே அதிகமாக விறைக்கவும்; பிண்டமும் தினமொன்றாகும், தர்ப்பணத்தினளவு போசனமும் உதவல்வேண்டும்.

மரணாசௌசம் கிடைத்ததினத்தில் நிறுத்திய கல்லை ஆசௌசமுடிவிலே யெடுத்தல்வேண்டும் பீடமிருந்தால் இடித்துப்போடவும். பதினொராந்தினத்தில் செய்கின்ற ஏகோதிட்டச்சிராத்தமும் பதினைந்தாகச்சொல்லிய சிராத்தமும் தப்பாதுசெய்தல் வேண்டும். மற்றையநாள் சமயி புத்திரன் என்னு



மிவர்களைக் கந்தர் சண்டர் கணேசர் என்னுமிக்கடவுளர்களுடனே சேர்த்துச் சபிண்டீகரணம் செய்யத்தக்கது. மற்றைச் சாதகர் போதகர் என்னுமிவர்களை ஈசர் சதாசிவர் சாந்தர் என்னுமித்தேவர்களுடனே சேர்த்துச் சபிண்டீகரணம் செய்தல் வேண்டும் அச்சபிண்டீகரணச்செய்கையினாலே ஆசௌசத்தினின்றும் நீங்கியசுத்தனாகிய கர்த்தாவானவன் வருடம்வரைக்கும் சோதகும்பசிராத்தம் பதினைந்தென்னுஞ் சிராத்தம் ஆட்டைத்திவசம் அட்டகைச் சிரார்த்தங்களையும் முக்கியமான சிவச்சிராத்தங்களைப்போலச் செய்தல்வேண்டும். நக்கினசிராத்தத்தை தகனக்கிரியையின் இறந்தவனைக் குறித்துப் புதுப்புடவை பச்சரிசி தக்ஷிணை முதலியபொருள்களைச் சிவதீட்சைபெற்றுச் சமயாசாரத்திட பத்தியுள்ள இல்வாழ்வான்கையிற் கொடுத்தல்வேண்டும். முற்றத்திலும் வீட்டின்புறததிலும் புறவாயிலிலாயினும் பிதிர்களுககு ஆலயம் செய்தல்வேண்டும்.

மூன்று மேகலையமையும்படி செய்த பீடத்தின் முன்னே, பெருவிரலும் நடுவிரலும் கொண்டளக்கப்படுமளவைக் கொண்ட குழியைத்தோண்டியபின், ஆசாரியர் கோமயத்தினாலே சுத்திசெய்யப்பட்ட பீடத்தின் நடுவே ஒருவொட்டை நீளத்திற் றருப்பையினாலே கூர்ச்சத்தை முடிந்துவைத்து அப்பீடத்திற்கு முன்னுள்ள குழியின்கண்ணே கருங்கல்லையாயினும் செங்கல்லையாயினும் தாபிக்கததக்கது. அல்லது சட்டியிற்றானும் தாபித்தலும் விதியாகும். முன்சொல்லிய பீடமில்லாமல் குழிமாத்திரம் கையினாலேகிண்டி முன்சொல்லியபடியே கூர்ச்சத்தை யதன்கண்ணேவைத்து தர்ப்பித்தலும் விதியாகும்.

சாதகர் போதகராகுமிருவர்க்கும் ஈசர் சதாசிவர் சாந்தர் என்னுமிவர்திருநாமத்தினாலே தருப்பணஞ்செய்தல் வேண்டும். சமயி புத்திரருக்காயின் கந்தர் சண்டர் கணேசர் என்னுமிவர்கள் திருநாமத்தினாலே எள்ளுடனே கூடிய நீரினாலே தருப்பணம் செய்யத்தக்கது. தர்ப்பணமெனினும் தருப்பணமெனினும் பொருந்தும். அஃது பிரீதிப்படுத்தல் என்பதுகருத்து.

நான்குவருணத்தாருக்கும் செய்யப்படும் தர்ப்பணத்தின் தொகையாவன, பிராமணருக்கு எழுபத்தைந்தும் சத்திரியருக்கு நூற்றிரண்டும் வைசியருக்கு நூற்றைம்பதும் சூத்திரருக்கு ஐஞ்ஞூற்றிருபத்தைந்தும் என்றுசொல்வார்கள். இனிப் பிண்டத்தின்கணக்கை யறியப்புகின் பிராமணருக்கு பத்தும் சத்திரியருக்கு பன்னிரண்டும் வைசியருக்கு பதினைந்தும் சூத்திரருக்கு முப்பதுமென்று சொல்வர். அவரவர்க்குச் சொல்லிய தினங்களினாலே பெருக்கியறியவும்.

சமயத்தின் மூர்த்திகள் மூவருக்கும் மும்மூன்று தருப்பணம் தர்ப்பித்தல்வேண்டும். அடுத்த விரண்டாநாள் தொடங்கி ஆசௌசம் முடியும் வரைக்கும் முன்சொன்னவற்றுடனே திரும்பவும் ஒவ்வொருதருப்பணம் நாடோறும் அதிகம் அதிகமாகத் தர்ப்பிக்கத்தக்கது. இனிப்பிண்டம் முதனாள் தொடங்கி முத்தேவர்களுக்கும் தனித்தனியொவ்வொருபிண்டம் ஆசௌசம் முடியும்வரைக்கும் கொடுத்தல்வேண்டும். தர்ப்பணம் பிண்டம் என்பவையின் தொகையைக் கணக்கெண்ணி அறியத்தக்கது. நவச்சிராத்தம் நான்காம்நாள் ஐந்தாம்





நாள் ஒன்பதாம்நாள் பதினோராம்நாள் என்பவைகளிலே பிண்டதானம் உதகதானம் மந்திரம் தூபம் புட்பம் என்பவைகளில்லாமல் செய்தல் விதியாகும். அதுவும் ஒற்றைப்பட்ட கணக்குள்ள பிராமணரைக் கொண்டு புசிப்பித்தல்வேண்டும். இனி அத்திபெறுக்குதல் பிராமணருக்கு முதனாளும் சத்திரியருக்கு மூன்றுநாளும் வைசியருக்கு ஐந்தாநாளும் சூத்திரருக்கு எழாம்நாளும் பெறுக்கத்தக்கது. ஒன்பதாம் நாளும் பெறுக்கலாமென்றும் சொல்வார்கள் எல்லா வர்ணத்தாரும் மண்பாண்டத்தில் பெறுக்கிவைத்தல் நியாயமாகும். ஞாயிறு வெள்ளி சனி என்னும் வாரங்களிலே அத்திபெறுக்காது விடல்வேண்டும். இவ்வாரங்களிலே பெறுக்குவாராயின் குலம் நாசமடையும் என்று சொல்வர்கள். ஆதலால் நல்லவாரத்திலே பெறுக்கல்வேண்டும்.

கீழ்வருணத்தவருக்குச் சொல்லிய தினங்கள் மேல்வருணத்தவர்க்கும் கூடும். ஆசௌசம் முடிந்த தினத்தில் முன்னே தாபித்துவைத்த கல்லுடனே கூர்ச்சம் புட்பம் பிண்டம் முதலியவற்றையெடுத்துப் பீடத்தையிடித்து வாத்தியமுழக்கத்துடனே புண்ணியதீர்த்தக்கரையிற் கொண்டுபோய் நீரிலே நடுவே போட்டு, முழுகத்தக்கது. பின்னர் ஆசௌசம் முடிந்தபின்னர்த் தொடங்கி ஒருவருடத்துள்ளே பதினாறுசிராத்தமும் செய்தல்வேண்டும். செய்து முற்றியபின்னர் வருடமுடிவில் சபிண்டீகரணத்தைச் செய்யவும். ஏகோதிட்டஞ்செய்த விரண்டாநாள் சபிண்டீகரணம் செய்யப்பட்டவனுக்கும் வருடமுடிவில் தருப்பணம் சபிண்டீகரணம் செய்யப்பட்ட இவர்களுக்கும முதனாளிலே சோதகும்ப சிராத்தம் செய்தல்வேண்டும்.

சபிண்டீகரணம் பண்ணுங்காலமாவன: பிராமணருக்குப் பன்னிரண்டாநாளும், சத்திரியருக்குப் பதினாறுநாளும, வைசியருக்கு இருபத்தொராநாளும், சூத்திரருக்கு முப்பத்தொராநாளும், செய்யத்தக்கனவாம். இச்சபிண்டீகரணம் முடியும்வரைக்கும் ஆசௌசம் நீங்காதென்று சொல்வர்கள். மூன்றுதினத்துக்குள்ளே பிண்டோதகங்கள் தானஞ்செய்யவேண்டிய நியாயம் வருமாயின், முதனாளில் ஒரு பிண்டமும் இரண்டாநாளில் நான்குபிண்டமும் மூன்றுநாளில் ஐந்துபிண்டமும் வழுவாது உதவல் வேண்டும். பூரணாசௌசத்தினுள்ளே மாசப்பிறப்பு அமாவாசி முதலியவை வந்தால், அவை வருதற்கு முன்னே இறந்தவனைக்குறித்து பிண்டோதகங்களெல்லாம் கொடுத்தல்வேண்டும். மேலேசொல்லிய மாசப்பிறப்பு அமாவாசி வந்தாலும் பெற்ற புத்திரனானவன், பிண்டோதகங்களெல்லாம் விடாது செய்தல்வேணடும். அபுத்திரர்கள் புத்திரனைப்போலச் செய்யலாகாது. எல்லாக் கிரியைகளையும் ஆசௌசத்தினுள்ளே செய்துமுடித்தாலும், கல்லெடுப்பு ஆசௌச முடிவிலன்றைக்குச் செய்யத்தக்கது. சபிண்டர்கள், ஆசௌசவாரம்பத்தின் இரண்டாந் தினந்தொடங்கி ஏகோத்தரவிருத்தியுதகஞ் செய்யத்தக்கது.

சமானோதகர்க்கு மூன்று தர்ப்பணமாகும். ஒன்றரைநாளாசௌசமுடையவர்களாகிய சோதகர்க்கு ஒரேதர்ப்பணமாகும். இந்தமூவகையோரும் தங்கள் ஆசௌசம் முடியும்வரைக்கும் மேலே சொல்லிய கிரியைகளைச் செய்தல்வேண்டும்.



பிரமசாரியானவன் பிதாமாதாவென்னும் இருவரையுந்தவிர மற்றையவர்களுக்கு தகனக்கிரிகை முதலாகச் சபிண்டீகரணம் முடியாகச்செய்வானாயின், மறுபடி உபநயனம் பெற்றுக்கொள்ளல்வேண்டும். சைவசமயத்திலே தகனக்கிரியை முதலியவற்றிற்குரியவர் முன்சொல்லிய இருபதின்மர்களுள்ளே சிவதீட்சைபெற்று ஒழுக்கநிலையிலே நின்றவரே செய்தல்வேண்டும் அவ்வொழுக்கமில்லாதவர் செய்தற்கு அதிகாரமில்லையென்று சிவாகமங்கள் தொனிசெய்கின்றன. புத்திரனில்லாதவனுக்கு மனைவிக்கும் குருவுக்கும் தம்பிக்கும் தோழனுக்கும் சகோதரிக்கும் மாமனுக்கும் ஏகோதிட்டகிரியைவரைக்கும் செய்யத்தக்கது. சபிண்டீகரணம் செய்தற்கதிகாரமில்லை.

ஆபத்துக்காலங்களிலும் அக்கினியில்லாவிடத்திலும் கிரகணகாலத்திலும் தீர்த்தயாத்திரை செல்லும்பொழுதும் பிராமணர் சத்திரியர் வைசியர் என்னும் மூன்றுவருணத்தாரும் ஆமச்சிராத்தஞ் செய்யத்தக்கது. சூத்திரர் எப்பொழுதும் ஆமச்சிராத்தமே செய்தல்வேண்டும். தத்தபுத்திரனானவன் நான்குவருணத்திலும் சபிண்டீகரணம் மாசிகம் பிண்டதானங்களும் செய்யலாகுமென்று சொல்வர்கள்.

ஆசாரியர், சாதகர் புத்திரன் சமயி என்னுமிவர்களுக்கு அந்தியேட்டி செய்யத்தக்கது. அவ்வாசாரியரில்லையாயின், சாதகனும் சாதகர் முதலியோர்களுக்குச் செய்யத்தக்கது. இனிப்புத்திரனும் புத்திரன் முதலியோர்க்குச் செய்யத்தக்கது. சமயி சமயிக்கும் செய்யத்தக்கது. இங்ஙனம் கூறியவிதிப்படி கிடையாதிருக்கின், சமயிமுதலியோர்கள் மேலவர்களுக்கும் செய்யலாம்.

சைவசமயத்திலே சமயம் அத்துடன் விசேடம் உலோகசிலதன்மீணி சாதிஉத்தாரணம் என்று ஐந்துவிதப்பட்ட சிவதீட்சைபெற்ற ஒழுக்கத்திட பத்தியுடையவர்களுக்கு மேலாகிய சிவசிராத்தம் பண்ணல்வேண்டும். வைதிகசிராத்தம பண்ணலாகாது: பண்ணுவாராயின செய்பவர் செய்விப்பவர் என்றிருவர்களும நரகத்துக்கிரையாவர்கள். ஏகோதிட்டசிராத்தத்திலே சிவபெருமானுககு விதிப்படியே நீலநிறமுள்ள இடபத்தைத் தானம்பண்ணல்வேண்டும். மேற்கூறிய சிராத்தங்களெல்லாம் செய்தாலும் இடபதானம செய்யாதுவிடுவாராயின், பிசாசவடிவம் நீஙகாது ஆதலால் மேலேகூறிய சிராத்தங்கள் எல்லாவற்றையும செய்து எம்பெருமானுக்கு இடபதானமும் தப்பாது செய்தல்வேண்டும். சாதி சமயம் ஆச்சிரமம் எனபனவற்றுள்ளே சொல்லப்பட்ட நியமாசாரங்களை வழுவாது அநுட்டிப்பாராயின், தேவர்களாவர்கள். அவற்றினின்றும் வழுவுவாராயின, சத்தியமாகப் பிசாசராவர்கள். அப்பிசாசவடிவம் புத்திரர் முதலியோர்செய்யுந் தானம முதலிய கிரியையினாலே நிவாரணமாகும்.

ஆசௌசவிதி

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# உருத்திராக்ஷ மான்மியம்.

## உருத்திராக்க வுற்பத்தி வரலாறு.

## உருத்திராக்கம் என்பது சிவபெருமானது கண்ணென்பது பொருள்.

முப்புரத்தவுணர்களால் வருந்திய பிரமன்முதலிய தேவர்கள் சிவபெருமானை நோக்கி யருந்தவஞ் செய்தபோது சிவபெருமான் எழுந்தருளி வியப்புற்று ஆயிரம்வருடம் உற்றுநோக்கிக்கொண்டிருந்தனர். அப்படியே திருக்கண்கள் நோக்கிய காரணத்தால் அவர் வலக்கண்ணினின்று பன்னிரண்டும் இடக்கண்ணினின்று பதினொன்றும் நெற்றிக்கண்ணினின்று பத்தும் ஆக (௩௬) முப்பத்தாறு நீர்த்துளிகள் சிந்தின. முப்பத்தாறு நீர்த்துளிகளும் மரங்களாகத் தோன்றின அவற்றின் காய்களே உருத்திராக்க மணிகளாயின. அம்மணிகள் செம்மை வெண்மை கருமை பொன்மை என நான்குவிதநிறங்களுள்ளன.

### வருணபேதம்.

அவைகளில் வெண்மை பொன்மை பிராமணச்சாதியென்றும் செம்மை சத்திரியச்சாதியென்றும் செம்மையும வெண்மையும் கலந்த நிறமுள்ளவை வைசியச்சாதியென்றும் கருமைநிறமுள்ளவை சூத்திரச்சாதியென்றும் ஆகமிகள் கூறுவார்கள்.

இலக்கணக்குறிப்பு ஒருமுகமுள்ளது சிவவடிவம் இதை யணிந்தால் பிராமணப்பெண்ணைக் கொ

லைசெய்த பாவத்தைப் போக்கும். இரண்டு முகமுள்ளது சிவசத்திவடிவம் இது பல கோகத்திகளை நீக்கும். மூன்றுமுகமுள்ளது அக்கினிவடிவம் இது பெண்களைக் கொலைசெய்த பாவத்தைப் போக்கும் நான்கு முகமுள்ளது பிரமதேவவடிவம் இது கொடிய நரகத்தினின்றும் மீட்டெடுக்கும். ஐந்துமுகமுள்ளது காலவுருத்திரவடிவம் இது தகாத புசிப்பும் இன்பமில்லாத புணர்ச்சியினாலுண்டாகிய பாவங்களையும் போக்கும். ஆறுமுகமுள்ளது இது முருகக் கடவுள் வடிவம் வலக்கையிலணியத்தக்கது. விதவைகள் முதலிய பெண்களைக் களவுப்புணர்ச்சியினாலே பெற்ற சிசுவைக் கொலைசெய்த பாவத்தையும் போக்கும். ஏழுமுகமுள்ளது ஆதிசேடவடிவம், இது கோகத்திகளையும் போர்க்களைக் கொலைசெய்த பாவத்தையும் போக்கும். எட்டுமுகமுள்ளது விநாயகர் வடிவம், இது துலாபாரந்தூக்கிய பொருள் தானம் வாங்கியதனாலுண்டாகிய பாவங்களைப் போக்கும். ஒன்பதுமுகமுள்ளது வைரவர்வடிவம் இடக்கையிலணியத்தக்கது. விஷமுள்ள தக்கன்முதலாகிய பாம்புகளை முற்பிறப்பில் அடித்துக்கொன்ற பாவங்களையும் போக்கி முத்திக்கும் வழிகாட்டும். பத்துமுகமுள்ளது விஷ்ணுமூர்த்திவடிவம், இது இருபத்தேழு நட்சத்திரங்கள் நவக்கிரகங்கள் பூதங்கள் பிசாசுகள் பிரமராட்சதர்கள் இவர்களாலுண்டாகும் பயங்கரம் முதலாகிய குற்றங்களையும் நீக்கும். பதினொருமுகமுள்ளது பதினொரு வுருத்திரர்வடிவம் வேதமுறைப்படிசெய்த ஆயிரம் அசுவமேதயாக பலனையும் நூறுயிரம் கோதானங்களின் பலனையுங் கொடுக்கும் பன்னிரண்டுமுகமுள்ளது துவாத ஆதித்தர்வடிவம் இது அசுவமேதமும் பசுமேதமும்



பொன்மேருதானமுஞ் செய்தபலனையும் கொடுக்கும் பதின்மூன்று முகமிருக்குமானால் காமசிந்தையில்லாத மற்ற இட்டகாமியங்களையும் இரசவாத பொன்னையும வேறு நன்மைகளையும் கொடுக்கும் தாய் தந்தை சகோதரர்களுக்குச் செய்த பாவத்தையும் நீக்கும். பதினான்குமுகமுள்ளது சிவம் சத்தியின் வடிவம் இது முனிவர்களும் தேவர்களும் மற்றெல்லாரும் வணங்கும் மகிமையை யுடையது. வசியங்களையுதவிப் பின்பு ஊழிகாலத்தும் அழியாத பரமுத்தியைக் கொடுக்கும்.

தோற்கருவி செய்யும் வருணத்தாரும் அவ்வருணத்துக் கன்னியரை அபுத்திபூருவமாகப் புணருவோரும் மதுமாமிசம் உண்ணுகின மாந்தரும் உருத்திராக்கத்தைத் தலையிலெடுத்து வைத்துத் தாங்குவார்கள் ஆனால் துக்கத்தைச் செய்கின்ற பாவங்கள் நீக்கிச் சிவசொரூபமாவார்கள்.

உருத்திராக்கந் தரிக்கும் விதியும் பலனும் வருமாறு: குடுமியிலும் பூநூலிலும் ஒவ்வொருமணியும் சிரசிலே இருபத்திரண்டுமணியும் காதுகளிலே ஒவ்வொருமணியும் கழுத்திலே முப்பத்திரண்டு மணியும் புயங்களிலே தனித்தனியே பதினாறுமணியும் கையின்மணிக்கட்டுகளிலே தனித்தனி பன்னிரண்டு மணியும் மார்பிலே நூற்றெட்டுமணியும் வகுத்துத் தரித்துக்கொண்டு உமாமகேசுரனை மன்மனசுடனே மானதபூசைபுரிந்து யாதொரு சிவசாதிகளை மிதிக்காமல் ஓரடியெடுத்து வைத்தால் ஒரு அசுவமேத யாகஞ்செய்த பலனுண்டாகும். எனபது ஆகமிகளது திருவாக்கின் திண்ணம்.

குடுமியில் உருத்திராக்கந் தரித்தவர்கள் கோடி பலனடைவர்கள். காதிலணிந்தவர்கள் ஒரு பத்து கோடி பலனடைவர்கள். கண்டத்திலணிந்தவர்கள் ஆயிரக்கோடி பலனடைவர்கள். கையிலணிந்தவர் கள் அனந்தகோடி பலனடைவர்கள். அபுத்திபூருவமாக எவ்விதபாவங்களைச் செய்தவர்கள் ஆனாலும் இறக்கும்போது மரணகாலத்தில் அணிவார்களானால் காலன்வாதையினின்றும் நீங்கி மறுபிறப்புத் தொடராது என்பது சுருதிப்பிரமாணம்.

குடுமியிலும் காதுகளிலும் பூணூலினும் எப்போதும் தரித்துக்கொள்ளலாம் மற்றத்தானங்களிலேயென்றால் சயனத்திலும் நோயிலும் செனனவத்தையிலும் மரணவத்தையிலும் தரித்துக்கொள்ளலாகாது. அவசியமாய் உருத்திராக்கந் தரிக்க வேண்டிய காலங்கள்.

சந்தியாவந்தனம் சிவமந்திரசெபம் சிவபூசை சிவத்தியானம் சிவாலயதரிசனம் சிவபுராணம் படித்தல் கேட்டல் சிராத்தம் முதலியவை செய்யுங்காலங்களிலே தரித்துக்கொள்ளல் வேண்டும் தரியாமல் இவைசெய்தவர் கிடைக்கும் பலன் அற்பமாகும்.

உருத்திராக்கம் கோக்கவேண்டிய விதி. பொன்னாயினும் வெள்ளியாயினும் தாம்பிரமாயினும் முத்தாயினும் பவளமாயினும் இடையிடையே முகத்துடனே முகமும் அடியோடு அடியும் பொருந்தக் கோர்வைசெய்து தரித்துக்கொள்ளல் வேண்டும்.

உருத்திராக்க மணியைப் பத்தியோடாயினும் பத்தியில்லாமலும் அழகு உண்டாக வாபரணமாக வணிந்தால் முடிவிலே நற்பதவியைத் தருமென்பதைப் பின்வரும் சரித்திரமுணர்த்துகின்றது.



நான்குவேதங்களையும் ஓதியுணர்ந்த பிராமணர் வசிக்கின்ற நந்தியென்னுஞ் சிறந்த நகரத்திலுள்ள சிவாலயத்தில் திருத்தொண்டு செய்கின்ற தாசிகளில் ஒருத்தி நந்தையென்பவள் ஒருசேவல் ஒருகுரங்கு ஆகிய இவ்விரண்டையும் மிக்கவன்புடனே வளர்த்து வந்தனள். அவைகளுக்கு ஆபரணமாக முழுமுதற் கடவுளாகுஞ் சிவபெருமானது திருக்கண்ணென்று சொல்லப்படும் உருத்திராக்க மணிகளுக்குப் பொன்னாற் கவசமணிந்து இடையிடையே முத்துக்கோத்து மாலையாக்கி அவ்விரண்டின் கழுத்துக்கும் அணிந்தாள். குரங்கின் கால்களுக்கும், கைகளுக்கும் கட்டினாள் சேவலின் உச்சிக்கொண்டைக்கும் தரித்தாள். பரதசாத்திர முறைப்படி ஆடற்றொழில் செய்யும்படி பழக்கினாள். அப்படியே பழகியவைகள் நடனஞ் செய்யும்போது அதனைக்கண்டு ஆனந்தங் கொள்வாள். அக்குரங்கும் சேவலும் நெடுங்காலங்கழித்து முன்னுள்ள பழவினைப்படியே வுயிர் விட்டிறந்தன. உருத்திராக்கம் அணிந்த புண்ணிய வலிமையினாலே அவ்விரண்டில் ஒன்றாகிய சேவல் காசிமீரதேசத்தை யாளுகைபண்ணுகின்ற பத்திரசேனனென்னும் இராசாவின் மனைவிசெய்த புண்ணிய பலத்தினாலே கருக்கொண்டு ஆண்குழந்தையாகப் பிறந்தவுடன் அப்பத்திரசேனன் குழந்தையைக் கண்டவுடன் ஆனந்தங்கொண்டு நல்லசுபதினத்தில் சுதர்மாவெனப் பெயரிட்டனன். மற்றொன்றாகிய குரங்கு அப்பத்திரசேனனது மந்திரியின் மனைவிவயிற்றிற் ஆண்குழந்தையாகப் பிறந்தது. மந்திரியும் தனது புத்திரனைக்கண்டு, ஆனந்தங் கொண்டான். இவ்விரண்டு குழந்தைகளும் உயிரும் உடம்பும்போல வொருவரை யொருவர் விட்டுப்பிரியாமல் வளர்ந்து வருங்காலத்தில் முற்பிறப்பிற்

செய்த புண்ணிய வலிமையினாலே சிவபத்தி சிவஞானமுடையவர்களாகி நவரத்தினமணி பொன்னாபரணங்களை விரும்பாது உருத்திராக்க மணிகளையே ஆபரணங்களாய்த் தரித்தவர்களாய் தங்கள் ஆளுகைக்குட்பட்ட குடிகளுக்கு நன்மைசெய்து அத்தேசத்தை யாளுகைபண்ணி வந்தனர். பின்பு இராசவாழ்வும் நீடாயுளும் பெற்றுப் பின்பு சிவபெருமானது தானமாகுந் திருக்கைலாசமலையை யடைந்தார்கள். இவர்களை முற்பிறப்பிலே குரங்காகவும் சேவலாகவும் வளர்த்த நந்தையென்னும் கணிகைமாதும் திருக்கைலாசத்தை யடைந்தனள்.

பகுத்தறிவில்லாத குரங்குஞ் சேவலும் உருத்திராக்க மணிகளைத் தாங்கினதால் இவ்வளவு பெரும் பேறுகிடைத்ததென்றால் அறிவுடைய மானுடர் அணிந்தால் அவர்களுக்குக் கிடைக்கும் பலனை என்னாற் பேசவியலுமோ விபலாது. அரகர சிவசிவ பதினான்கு முகவுருத்திராக்கங் கிடைப்பது அருமை கிடைத்தால் குற்றமற்ற ஞானவான்கள் தங்கள் கண்டத்தில் அணியத்தக்கது.

## கவி.

புரங்கள் மூன்றும் பொடித்திடுங் காலரன்
திரங்கொ னாட்டந் திறப்பப்பஃறுளி
பரந்த தன்னவற்றிற் படுபண்மணி
வரங்கொளக் குமணியென லாயதே.

உருத்திராக்க மான்மியம்
முற்றிற்று.



